2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம்.

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12. மதுரை 13—12—74 வெள்ளி மலர்: 288

## 12500 எஞ்சினியர்கள் போராட்டம்

புதுடெல்லி, டிச. 11—

அந்தஸ்திலும், சம்பளத்திலும் ஐஏஎஸ், அதிகாரிகளுக்கு சமமாக எஞ்சினியர்கள் கருதப்பட வேண்டும் என்ற கோரிக்கைகள் உட்பட 11 கோரிக்கைகளை வலியுறுத்தி பீகாரில் 12500 எஞ்சினியர்கள் "விதிப்படி வேலை" போராட்டத்தை இன்றிலிருந்து ஆரம்பிக்கிறார்கள். இப்போராட்டம் ஜனவரி 4 வரை நடக்கும் என்றும் மேலதிகாரிகளோடு ஒத்துழையாமை, கையாளப்படும் என்றும் பீகார் எஞ்சினியர் கூட்டு நடவடிக்கை கமிட்டி செயலாளர் கூறியுள்ளார்.

## கே. ஜி. போஸ் காலமானார்

கல்கத்தா, டிச. 11—

தபால்—தந்தி ஊழியர்களின் அகில இந்தியத் தலைவரும் மேற்கு வங்க மக்களின் அன்புத் தலைவருமான தோழர் கே. ஜி. போஸ் இன்று (புதன்) காலை லண்டனில் காலமானார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம். புற்றுநோய் சிகிச்சைக்காக தோழர் கே. ஜி. போஸ் லண்டனில் மருத்துவமனை ஒன்றில் அனுமதிக்கப்பட்டிருந்தார்.

இவர் மேற்கு வங்க சட்டசபையின் முன்னாள் உறுப்பினர் ஆவார்.

இவர் மேற்கு வங்கத்தில் தலைமைக்குமாஸ்தாவாக வேலைபார்த்தவர், தொழிற்சங்க இயக்கத்தில் ஈடுபட்டதன் காரணமாக காங்கிரஸ் ஆட்சியால் வேலைநீக்கம் செய்யப்பட்டவர்

# ★ தமிழகத்தில் கடும் வறட்சி—ஏழை விவசாயிகள் வாழ வழியில்லை

# ★ விவசாயத் தொழிலாளர்களோ பட்டினிச் சாவின் விளிம்பில்

# உடனடி நிவாரண நடவடிக்கை எடுத்திடுக

## தி.மு.க. அரசுக்கு விவசாயிகள் சங்கம் அவசர வேண்டுகோள்

மதுரை, டிச. 11—

ஏழை விவசாயிகள் வாழ வழியில்லை; கூலி விவசாயிகள் பட்டினிச்சாவின் விளிம்பில் நிற்கின்றனர். ஆம். அந்த அளவுக்கு தமிழகத்தில் கடுமையான வறட்சி.

இந்தப் பட்டினிச் சாவிலிருந்து தமிழக மக்களைக் காக்க துரித நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும் என்று தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் செயலாளர் தோழர் கோ. வீரய்யன் தமிழக அரசுக்கு அவசர வேண்டுகோள் விடுத்துள்ளார்.

அவர் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:—

தமிழ்நாடு விவசாயிகள் சங்க நிர்வாகிகள் கூட்டம் 8—12—74ம் தேதி தஞ்சையில் கூடியது. வடகிழக்குப் பருவ மழை பொய்த்து விட்டதால் தமிழகத்தில் ஏற்பட்டுள்ள வறட்சி நிலைமையைப் பற்றி பரிசீலனை செய்தது.

### கடுமையான நிலைமை

இராமநாதபுரம், கோவை, புதுக்கோட்டை, தர்மபுரி, மதுரை, சேலம், செங்கற்பட்டு மாவட்டங்கள் முழுமையாகவும், பிற மாவட்டங்களில் பெரும் பகுதியும் வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ளன. பயிர்கள் தீய்ந்துவிட்டன. கிணறுகள் வறண்டுவிட்டன. குடிப்பதற்கும் தண்ணீர் இல்லை. விவசாயத் தொழிலாளர்கள் வேலையின்றி, கைப்பிடி தானியமின்றி பஞ்சைகளாய் அலைந்து திரிகிறார்கள்.

பிறந்த ஊரை விட்டு குடும்பம் குடும்பமாக வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள். சென்ற இடங்களிலும் வேலை கிடைக்காமல் கண் கலங்கி நிற்கிறார்கள். இன்று அவர்கள் பட்டினிச் சாவின் விளிம்பில் நிற்கிறார்கள். நடுத்தர - ஏழை விவசாயிகள் ஆடு மாடு, [illegible] பாத்திரங்களை விற்று விதைத்து உழவடை செய்ததும் காய்ந்து தீய்ந்து போனதால் பேரதிர்ச்சியுற்று ரத்தக்கண்ணீர் வடித்துக் கொண்டு நிற்கிறார்கள்.

வாங்கிய கடனை கட்ட முடியவில்லை. புதிதாக கடன் கிடைக்க வழியுமில்லை. தனது உயிருக்கு உயிரான ஆடு, மாடுகளை விற்றால் வாங்கிய விலையில் பாதிக்கும் போகவில்லை. விவசாய மக்களின் அவதியைப் பற்றி வரும் செய்திகளைக் கேட்டு நிர்வாகக்குழு மிகவும் கவலை கொள்கிறது.

5—12—74ந் தேதிய மாவட்டக்கலெக்டர்கள் மாநாட்டிற்குப் பின், தமிழக முதலமைச்சர் செய்தியை வெளியிடும்போது இராமநாதபுரம் - புதுக்கோட்டை, கோவை மாவட்டங்கள் முழுமையாகவும், பிற மாவட்டங்களில் பல பகுதிகளும் பாதிக்கப்பட்டுள்ளன என்று அறிவித்திருப்பது— அரசே இந்த அளவு கூறுவது — வறட்சி நிலைமை அவ்வளவு மோசமாகியுள்ளது என்பதைக் காட்டுகிறது.

இருப்பினும் முதலமைச்சர் முழு உண்மையையும் கூறவில்லை. தமிழகத்தில் பட்டினிச் சாவுகள் விழ ஆரம்பித்து விட்டன. இன்னும் சில நாட்கள் போனால் அதன் கோரப் பசிக்கு விவசாயிகள் பலியாவார்கள். செங்குத்தாக ஏறிவரும் உணவுப் பொருட்களின் விலையேற்றம் வறட்சியால் வாடும் விவசாயிகளை கதிகலங்க வைக்கிறது.

### அரசின் கண்துடைப்பு வேலைகள்

நிலைமை இவ்வளவு கடுமையாக இருக்கும்போது. 5 கோடி ரூபாய் நிவாரண வேலைக்கு ஒதுக்குகிறோம் என்று அறிவித்திருப்பது — யானைப் பசிக்குச் சோளம் பொரி போன்றுள்ளது. இது போதுமானதல்ல. மத்திய அரசோ 'வறட்சி நிவாரண நிதியே வழங்கப் போவதில்லை'' என்று அறிவித்தது கண்டிக்கத்தக்கது.

ரேஷன் லெவிக் கொள்முதல் உத்தரவு பற்றியும் அறிக்கைமேல் அறிக்கை விடுவதோடு சரி. நிலப்பிரபுக்களுக்கு ஆதரவான உணவுக் கொள்கையால மாநிலத்தில் படி அரிசி ரூ 3க்கும், படி சோளம் ரூ 4க்கும் உயர்ந்து கொண்டுள்ளது. இந்த நிலை வறட்சியை மேலும் மோசமாக்குகிறது.

இதற்கிடையில் இப்போதும் கூட சேலம் மாவட்டம் போன்ற சில மாவட்டங்களில் விவசாயிகள் பட்ட கடனுக்காக ஜப்தி போன்ற நடவடிக்கைகளும் எடுக்கப்படுகின்றன என்ற கொடுமையான செய்திகளும் நமக்குக் கிடைத்துள்ளன. அரசின் அறிக்கைகளும், பேச்சுக்களும், பாதிக்கப்பட்ட மக்களின் வேதனையை தீர்க்காது. உடனடியாகக் கீழ்காணும் நிவாரண நடவடிக்கைகளை துரிதமாக மேற்கொள்ளுமாறு வற்புறுத்துகிறது.

### கோரிக்கைகள்

கடுமையாக பாதிக்கப்பட்டுள்ள பகுதிகளை வறட்சிப் பிரதேசமாகப் பிரகடனப்படுத்துக.

துரிதமான நிவாரண வேலைகள் துவங்கவேண்டும், விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்கவேண்டும்.

மத்திய அரசிடமிருந்து நிவாரண நிதி பெற மாநில அரசு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

வறட்சியால் முழுமையாகப் பாதிக்கப்பட்டுள்ள விவசாயத் தொழிலாளர்கள் குடும்பங்களுக்கு அரிசியோ, புன்செய் தானியமோ இலவசமாக வழங்க வேண்டும். மானத்தை மறைக்க இலவசமாக துணிகள் வழங்கவேண்டும்.

நகரப் பட்சி—பேரூராட்சிகளில் பெயரளவுக்கு உணவு தானிய விநியோகம் என்ற கொள்கையை கைவிட்டு, நகரங்கள், கிராமங்களில் மலிவு விலையில் (கிலோ அரிசி ரூ. 1-00) உணவு தானியம் வழங்க வேண்டும்.

5லிருந்து 10 ஏக்கர்வரை லேவியும், 10 ஏக்கருக்கு மேல் உபரி பூராவும் கட்டாயக் கொள்முதல் செய்ய வேண்டும். அரசு தனது கையிருப்பை பெருக்கிக் கொள்ள வேண்டும்.

எல்லா கிராமங்களுக்கும் குடி தண்ணீர் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

மைசூர் தண்ணீரை மட்டும் நம்பி நிற்காமல் தஞ்சை மாவட்ட விவசாயம் பாதுகாக்கப்பட ஆழாய்க் கிணறுகள் அமைத்துக் கொடுக்க வேண்டும்.

தனியார், அரசு, கூட்டுறவு கடன்கள் வசூலை நிறுத்தி வைக்க வேண்டும்.

நிலவரியை ரத்து செய்ய வேண்டும்.

இந்த ஆண்டுக்குரிய குத்தகை பாக்கிகளை தள்ளுபடி செய்ய வேண்டும்.

ரெவினியூ கோர்ட்கள் அல்லது இதர கோர்ட்களில் உள்ள குத்தகை பாக்கி வசூலுக்காக உள்ள வழக்குகளை நிறுத்தி வைக்க வேண்டும்.

பஞ்ச நிவாரண வேலைகளை பொது ஜன கமிட்டிகள் மூலம் நிறைவேற்ற வேண்டும்.

மதுரை—முகவை, கோவை, தென்னாற்காடு, மேற்கு தஞ்சை ஆகிய மாவட்டங்களில் வறட்சி நிவாரண மாநாடுகள் நடைபெறும்.

இக்கோரிக்கைகளின் அடிப்படையில் பாதிக்கப்பட்டுள்ள விவசாயிகளை திரட்டி நிவாரணம் பெற மாவட்ட, வட்ட விவசாய சங்கங்கள் துரிதமான வேலைகளில் ஈடுபடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

## ஸ்டாலின் காலத்திய அமைச்சர் மறைவு

மாஸ்கோ, டிச. 9—

தோழர் ஸ்டாலின் காலத்திய சோவியத் யூனியன் அமைச்சரவையில் கப்பல் அமைச்சராக இருந்த வைஸ் அட்மிரல் நிகோலாய் ஜி. நெட்செவ் தனது 73 வது வயதில் மரணமடைந்தார்.

உலகத்திலேயே முதன் முதலாக, 1934-ல் தேர்தலின் மூலம் ஸ்பெயினில் கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சிக்கு வந்து குடியரசு ஆட்சியை நிறுவியபோது, பாசிஸ்ட்கள் உள்நாட்டு எதிர்ப்புரட்சியை ஏற்படுத்தி அக்குடியரசை கவிழ்த்தார்கள் அல்லவா? அந்த யுத்தத்தில் குடியரசின் சப்பல் படை கொண்டு பாசிஸ்ட்களுக்கு எதிராக தாக்குதல் தொடுத்தவர் வைஸ் அட்மிரல் குஜ்நெட்செவ்

இவர் ஸ்டாலின் மறைவுக்குப்பிறகு ஏற்பட்ட மாலங்கோவ் தலைமையில் அமைந்த அமைச்சரவையிலும் அமைச்சராக இருந்தார்.

1956-வரை சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் 20 வது காங்கிரஸ் வரை—கட்சியின் மத்தியக் கமிட்டி உறுப்பினராக இருந்தார்.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி பொதுச் செயலாளர் பிரஷ்னேவும் பிரதமர் கோசிஜினும் கையொப்பமிட்டு வெளியிட்ட இரங்கல் செய்தியோடு இவரது மரணச் செய்தியை டாஸ் செய்தி நிறுவனம் வெளியிட்டது.

## தோழர் கே. ஜி. போஸுக்கு மாநிலக்குழு அஞ்சலி

மதுரை, டிச 11—

தோழர் கே ஜி போஸ் அவர்களது மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில குழு சார்பில் செயற்குழு உறுப்பினர் தோழர் என் சங்கரய்யா கீழ்வரும் அறிக்கை விடுத்துள்ளார்:—

மத்திய அரசாங்க ஊழியர்களின் பெருந் தலைவரும், அயராத தொழிற்சங்கவாதியுமான தோழர் கே சி போஸின் திடீர் மரணச் செய்தி அறிந்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக் குழு அதிர்ச்சி அடைந்தது,

அவருடைய மரணம் நாட்டில் வளர்ந்துவரும் உழைக்கும் மக்களின் இயக்கத்திற்கு ஈடுசெய்ய முடியாத இழப்பாகும். மத்திய அரசு ஊழியர்களின் தொழிற்சங்க இயக்க வளர்ச்சிக்கு அவரது உழைப்பு என்றும் மறக்க முடியாதது.

தோழர் கே ஜி போஸின் குடும்பத்துக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழு தனது ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவிக்கிறது.

## கொலைகார மக்நமாராவிடம் வலது கம்யூனிஸ்ட் கோரிக்கை

கல்கத்தா, டிச. 9—

வியட்நாமில், மக்களைக் கொன்று குவித்த கொலைகாரன் ராபர்ட் மக்நமாரா, இவர், அமெரிக்க யுத்த மந்திரியாக இருந்தவர். 1968-ம் ஆண்டு, அவர் கல்கத்தாவுக்கு வந்தார். அப்போது அவருக்கு எதிர்ப்புத் தெரிவிக்க, இடதுசாரி கட்சிகள் பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டம் நடத்தினது.

டம்டம் விமான நிலையத்தில் நடந்த பிரம்மாண்டமான ஆர்ப்பாட்டத்தின் காரணமாக, அவர் நகருக்குள் வர ஹெலிகாப்டரை உபயோகிக்க வேண்டியதாயிற்று.

இப்போது சமீபத்தில் மக்நமாரா, கல்கத்தாவிற்கு வந்திருந்தார். கல்கத்தா புறநகர வளர்ச்சி நிறுவனம் உலக பாங்கியிடம் கடன் வாங்க விரும்புகிறது. மக்நமாராதான் அதன் தலைவர்.

அவரிடம் அதிகமாக கடன் அளிக்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுக்க, மேற்குவங்க சட்டசபை அங்கத்தினர்களைக் கொண்டு ஒரு குழுவை, அவரைச் சந்திக்கும்படி கேட்டுக் கொண்டது. சந்திப்பும் நடந்தது.

இதில் மேற்குவங்க சட்டசபை வலது கம்யூனிஸ்டுகளும் உண்டு. வலது கம்யூனிஸ்டுகளின் பிரதிநிதி மக்நமாராவை மீண்டும் மீண்டும் கேட்டுக் கொண்டார். .........வேண்டி விரும்பிக் கேட்டுக் கொண்டார்......... அதிக கடன் கொடுக்கும்படி............ஓ.........எவ்வளவு பெரிய வித்தியாசமான வளர்ச்சி...?

ஆதாரம்: 'டைம்ஸ் ஆப் இந்தியா'

## கேரளத்தில் 'பந்த்' முழு வெற்றி

## போலீஸ்-குண்டர் வெறித்தாக்குதல்

திருவனந்தபுரம், டிச. 11—

கொல்லும் பட்டினிக் கொடுமை, அடக்குமுறை பேய்த்தனம் — இவற்றையே ஆட்சி நெறிகளாக கொண்டுள்ள கேரள அரசையும் மத்திய அரசையும் எதிர்த்து டிசம்பர் 10-ம் தேதியன்று கேரள மக்கள் வெற்றிகரமான 'பந்த்' நடத்தினர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, கர்ஷகத் தொழிலாளர் கட்சி, சோசலிஸ்ட் கட்சி, கேரள சோசலிஸ்ட் கட்சி, கேரள காங்கிரஸ்—ஆகிய 5 எதிர்க்கட்சிகளின் தலைமையிலான "கூட்டுப் போராட்டக் குழு" விடுத்த அறைகூவலுக்கிணங்க இந்த பந்த் நடைபெற்றது. 'பந்த்' தின் போது, தொண்டர்கள் பலர், போலீஸ் தடியடியினால் ரத்தம் சிந்தினர். தலைவர்கள் உட்பட ஏராளமானவர்கள் கைதுசெய்யப்பட்டனர்.

### 'பந்த்' எதற்காக?

வயது வந்த ஒரு நபருக்கு ஒரு நாளுக்கு 12 அவுன்ஸ் ரேஷன் வேண்டுமென்பது கேரள மக்களின் வெகுநாளைய கோரிக்கை. ஆனால் அரசாங்கமோ உணவு ரேஷனை மிகக் குறைந்த 300 கிராமிலிருந்து தற்போது வெறும் 80 கிராமாக்கி விட்டது. இந்தப் பிச்சை ரேஷனுக்கும் நிச்சயமில்லை.

கேரள அமைச்சர்கள் உணவுக்காக, மத்திய அரசிடம் பல முறைகள் காவடி எடுத்துப் பார்த்தனர்.

ஆனால், கேரள மக்களின் வயிற்றுப் பிரச்னையை தீர்க்க முன்வரவில்லை மத்திய அரசு. இதைக் கண்டு அச்சுதமேனன் ஆட்சியாளர்களும், மத்திய அரசை எதிர்த்து ஒரு வார்த்தை கூட பேசாமல், கைகட்டி வாய்பொத்தி தொண்டரடிப் பொடியாழ்வார்களாக நடந்து கொள்கின்றனர்.

பட்டினி தீர்க்கக்கோரி போராடும் மக்களை தடி கொண்டு தாக்குகின்றனர். இத்தகு கொடுங்கோலாட்சியை எதிர்த்துதான் சென்ற 10-ம் தேதியன்று கேரளம் முழுவதும் ஆட்சியாளர்களை குலைநடுங்கச் செய்யும் பிரம்மாண்டமான பந்த் நடைபெற்றது.

ஆலைத் தொழிலாளர்கள், விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள், தோட்டத் தொழிலாளர்கள், அரசு ஊழியர்கள், மாணவர்கள், பஸ் ஊழியர்கள் மின்சாரத் தொழிலாளர்கள், கைத்தறித் தொழிலாளர்கள் - மற்றும் பிற தொழிலாளர்கள், ஊழியர்கள் அனைவரும் வேலை நிறுத்தம் செய்து 'பந்தை'தை முழு வெற்றி பெறச் செய்தனர்.

தெருக்களெல்லாம் வெறிச் சோடிக் கிடந்தன. கடைகளும், மார்க்கெட்டுகளும் மூடப்பட்டிருந்தன. பஸ், டாக்சி, லாரி முதலிய எந்த வாகனமும் ஓடவில்லை. ரயில்கள் கூட தாமதமாகவே ஓடின, கொச்சி, எர்ணாகுளம், கோழிக்கோடு, ஆலப்புழை முதலிய பல நகரங்கள் நிசப்தமாயின.

### போலீஸ் தடியடி நூற்றுக்கணக்கானோர் காயம்

திருச்சூர், நகரில் கர்ஷகத் தொழிலாளர் கட்சியின் தலைவர் வடக்கன் பாதிரியார், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சட்டமன்ற உறுப்பினர் டி கே கிருஷ்ணன், முன்னாள் நிதியமைச்சர் என் கே சேஷன் ஆகியோர் தலைமையில் சென்ற ஊர்வலத்தின் மீது போலீஸ் அக்கிரமமாகத் தடியடி நடத்தியது. சுமார் 100 பேர் காயமடைந்தனர். தலைவர்களை போலீஸ் கைது செய்தது.

கொல்லம் நகரிலும் போலீஸ் தடியடி நடத்தியது. கொல்லம் மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர் ஸ்ரீதரன் உட்பட பலர் காயமடைந்தனர்.

மலபார் மாவட்டம் வலியபுரா என்னும் இடத்தில் போலீஸ் படையும், இந்திரா காங்கிரஸ் குண்டர்களும் நடத்திய வெறித் தாக்குதலினால் எதிர்க்கட்சியினர், சுமார் 150 பேர் காயமுற்றனர்.

"அகில இந்திய ரீதியில் அரசாங்கங்களை கவிழ்க்க ஜெயப்பிரகாஷ் நாராயண் நடத்தும் போராட்டத்தின் ஒரு பகுதியே, கேரள பந்த் என்றும், இதை போலீஸ் அடக்குமுறை கொண்டு சமாளிப்பேன் என்றும் முதலமைச்சர் அச்சுதமேனன்—ஏற்கனவே மிரட்டியிருந்ததையொட்டித்தான் எதிர்க்கட்சியினர் மீது இத்தகைய நீசத்தனமான தாக்குதல்கள் நடந்தன.

தாக்குதல்கள் நடந்த போதும் கேரள மக்களும் எதிர்க்கட்சிகளும் மாநில அரசுக்கும் மத்திய அரசுக்கும் 'பந்த்'தின் மூலம் தக்க பதிலடி கொடுத்து விட்டனர்.

### அச்சுதனுக்கு கருணாநிதியின் எடுபிடி வேலை

கூடுதல் உணவு கோரியும், அடக்குமுறையை எதிர்த்தும் பந்த் போராட்டம் நடத்திய கேரள மக்களை ஒடுக்குவதில், கம்யூனிஸ்ட் என்று பொஞ்சங்கூட வெட்கமில்லாமல் சொல்லித் திரியும் அச்சுதமேனனின் அரசுக்கு மாநில சுயாட்சி வீரர் கருணாநிதி தனது போலீஸ் பட்டாளங்

(2-ம் பக்கம் பார்க்க)

தீக்கதிர்

# போராடும் கைத்தறி தொழிலாளர்கள்

மதுரையில் கடந்த சில தினங்களாக கைத்தறிநெசவாளர்கள் போராட்டத்தில் ஈடுபட்டுள்ளனர். கைத்தறி தொழிலாளர்களும் அத்தொழிலாளர்களின் பல்வேறு சங்கங்களும் இணைந்து இப்போராட்டத்தை நடத்துகின்றனர். சங்க ஊழியர்களின் உண்ணாவிரதமும் கைத்தறி முதலாளிகளுக்கு எதிராக ஆர்ப்பாட்டங்களும் நடைபெற்று வருகின்றன.

மேலும் நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள் மறியல் செய்து சிறைகளில் அடைக்கப்பட்டுள்ளனர்.

இந்தப் போராட்டம் நடைபெறுவதற்கு காரணம் என்ன?

74-ம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் கூலி உயர்வுக்கான நீண்ட போராட்டம் நடத்தியபிறகு அரசாங்கம் தலையிட்டு கைத்தறி முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் இடையே ஒரு கூலி உடன்பாட்டை ஏற்படுத்தியது. அந்தக் கூலி உடன்பாட்டை கைத்தறி முதலாளிகள் மீறியதன் காரணமாக இந்தப் போராட்டம் நடைபெறுகிறது.

இதே போலவே வட ஆற்காடு மாவட்டத்தின் குடியேற்றத்தில் லுங்கி தயாரிக்கும் தொழிலாளர்கள் பெரும் அவதிக்குள்ளாகியுள்ளனர். ஸ்டாக்குகள் தேங்கி விட்டன எனக் கூறி டிரேட் மார்க் முதலாளிகளும் இதர உற்பத்தியாளர்களும் தொழிலாளர்களின் கூலியை வெட்டுவதற்கு முயற்சிக்கின்றனர்.

இதை எதிர்த்து குடியேற்றம் கைத்தறி தொழிலாளர்கள் பல்லாயிரக்கணக்கில் ஒன்றுபட்டு போராடியதன் விளைவாக மாவட்ட ஆட்சியாளர் தலையிட்டு டிசம்பர் 20-ந் தேதி வரை கூலியை குறைக்க வேண்டாமென்றும், அதற்கிடையில் அரசாங்கம் தலையிடும் என்றும், தலையிட்டு நடவடிக்கை எடுக்கும் என்றும் முதலாளிகளை கேட்டுக் கொண்டுள்ளார்.

இன்னும் இதே போல் தமிழகத்தின் பல இடங்களிலும் ஸ்டாக்குகள் தேங்கி விட்டது எனக் காரணம் கூறி கைத்தறி முதலாளிகள், தொழிலாளர்களின் கூலியை வெட்டுவதற்கு முற்படுகிறார்கள்.

கைத்தறி தொழிலில் ஏற்பட்டுள்ள தேக்க நிலையை போக்குவதற்கு அரசாங்கம், விற்காத கைத்தறி துணி ஸ்டாக்குகளை கொள்முதல் செய்து அவற்றை விற்பனைக்கு தன் பொறுப்பில் ஏற்பாடு செய்ய வேண்டுமெனக் கோருகிறோம்.

நெருக்கடியினால் பாதிக்கப்பட்டுள்ள சிறிய கைத்தறி உற்பத்தியாளர்களுக்கு அரசாங்க நிதி நிறுவனங்களின் மூலம் கடன் உதவி அளிப்பதற்கு அரசாங்கம் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென வற்புறுத்துகிறோம். ஆனால் அதே நேரத்தில் நெருக்கடியைக் காரணமாகக் காட்டி தொழிலாளர்களின் கூலியை வெட்டுவதற்கு கைத்தறி முதலாளிகளை அரசாங்கம் அனுமதிக்கக் கூடாது.

கடந்த பல ஆண்டுகளில் தமிழகத்தின் லட்சக்கணக்கான கைத்தறி நெசவாளர்களின் உழைப்பைச் சுரண்டி உள்நாட்டிலும், வெளி நாட்டிலும் கொள்ளை லாபம் சம்பாதித்துள்ள கைத்தறி முதலாளிகள், தங்கள் தொழிலாளர்களுக்கு கொடுக்க வேண்டிய கூலியை தொடர்ந்து கொடுத்துதவ வேண்டுமென அரசாங்கம் உத்திரவிட வேண்டும். நெருக்கடியின் சுமையை கைத்தறித் தொழிலாளர்கள் மீது மென்மேலும் சுமத்துவதற்கு கைத்தறி முதலாளிகளுக்கு நியாயம் எதுவும் கிடையாது.

ஏற்கெனவே, அற்பசொற்ப கூலியாதலால் வாழ்க்கை நடத்த முடியாமல் கைத்தறி தொழிலாளர் குடும்பங்கள் திண்டாடுகின்றன. அவர்கள் தங்கள் பிள்ளைகளைக் கூட பள்ளிக்கு அனுப்பாமல் தங்களுக்கு உபவேலைகளை செய்ய வீட்டிலேயே வைத்துக் கொள்கின்றனர்.

இதனால், இக்குழந்தைகள் பள்ளி படிப்பைக் கூட பெற முடியாமல் தவிக்கின்றனர். குடும்பத்திற்கு கிடைக்கும் மிகக் குறைந்த வருமானமே இந்த அவல நிலைக்கு காரணம். இந்நிலையில் தமிழ்நாடு அரசாங்கம் இப்பிரச்சினைகளில் உடனடியாக தலையிட்டு மதுரை, குடியேற்றம் மற்றும் பல இடங்களில் கூலியைக் குறைக்க கைத்தறி முதலாளிகளின் முயற்சிகளை தடுத்து நிறுத்த வேண்டும்.

நாட்டில் ஏற்பட்டுவரும் பொருளாதார நெருக்கடியின் காரணமாக கைத்தறி போன்ற தொழில்களில் ஈடுபட்டிருக்கும் உழைப்பாளிகள் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர்.

தங்கள் நலனை பாதுகாத்துக் கொள்வதற்காக கைத்தறி நெசவுத் தொழிலாளர்களும், அவர்களது பல்வேறு சங்கங்களும் கலந்து பேசி தங்களின் கோரிக்கைகளை வற்புறுத்த மாநில ரீதியில் ஒன்றுபட்ட கிளர்ச்சியிலும், நடவடிக்கையிலும் ஈடுபடுவது அவசியமாகும்.

கைத்தறி நெசவாளர்களின் போராட்டத்தின் காரணமாக கைது செய்யப்பட்டுள்ள அனைவரும் விடுதலை செய்யப்பட வேண்டும். ஏற்கெனவே செய்து கொள்ளப்பட்ட கூலி ஒப்பந்தங்கள் தொடர்ந்து அமுல் செய்யப்பட வேண்டும் என்றும், கைத்தறி தொழிலாளர்களின் தொழிலுக்கும் வருமானத்திற்கும் வாழ்க்கைக்கும் நிலையான பாதுகாப்பு சட்ட ரீதியாக ஏற்படுத்தப்பட வேண்டும் என்றும் அரசாங்கத்திடம் வற்புறுத்துகிறோம்.

தமிழகத்தில் உள்ள ஜனநாயக இயக்கங்கள் அனைத்தும் கைத்தறி நெசவாளர்களின் போராட்டத்திற்கு எல்லா வகைகளிலும் ஆக்கமும் ஊக்கமும் அளிக்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

## ஸ்விட்சர்லாந்து மக்கள் வரி கொடுக்க மறுப்பு

பெர்ன், டிச. 9—

அதிக வரி தரமுடியாது என ஸ்விட்சர்லாந்து மக்கள் ஒரு பொதுஜன வாக்கெடுப்பு மூலம் அறிவித்துள்ளனர்.

இப்பொதுஜன வாக்கெடுப்பு கடந்த ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றது.

பற்றாக்குறை பட்ஜெட்போடுவதை தவிர்க்கவும், ஸ்விட்சர்லாந்தில் பெருகி வரும் பொருளாதார மந்தத்தைத் தவிர்க்கவும் அரசாங்கத்துக்கு ஏராளமான நிதி தேவைப்படுகிறது என்றும் அரசாங்கம் அறிவித்தது.

மேலும், அதற்பொருட்டு புதிய வரிகள் விதிப்பது பற்றி பொதுஜன வாக்கெடுப்பு நடத்தியது.

இதில் அரசாங்கத்தின் கோரிக்கைக்கு எதிராக 23 மாகாணங்களும், 12 மாகாணங்கள் ஆதரவாகவும் வோட்டளித்தன.

# வேலைப்பளுவை திணிக்க-ஆட்குறைப்பு செய்ய மின்வாரியம் சதித்திட்டம்

## மத்திய அமைப்பு எச்சரிக்கை

விருத்தாசலம், டிச 10—

தமிழ்நாடு மின்வாரியம் தனது ஒரு லட்சம் தொழிலாளர்களுக்கு டிச 1-ந்தேதி அளிக்க வேண்டியுள்ள புதிய சம்பள உயர்வை அளிக்காமல் தொழிலாளர்களுக்குத் துரோகம் செய்திட சகல தயாரிப்பிலும் இறங்கியுள்ளது குறித்து தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர் மத்திய அமைப்பு (சி ஐ டி யூ) எச்சரித்துள்ளது.

கடந்த 1-ந் தேதி இங்கு மத்திய அமைப்பின் தலைவர் தோழர் சி. கோவிந்தராஜன் தலைமையில் நடந்த செயற்குழுக் கூட்டத்தில் ஏ. நல்லசிவன், வி. பி. சிந்தன் உட்பட 25 பேர் கலந்து கொண்டனர்.

சம்பளப் பேச்சுவார்த்தை குழுவில் விவாதிக்க சங்கங்களை நிர்வாகம் தனித்தனியாக அழைத்தும் பேச்சுவார்த்தை நடத்த முயற்சிப்பதன் உள்நோக்கத்தைப் புரிந்து கொள்ளவேண்டும் என்று தொழிலாளர்களை இக்கூட்டம் கேட்டுக்கொண்டது.

மேலும், இக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தில் கூறப்பட்டிருப்பதாவது:—

### வேலைப் பளுவை உயர்த்துதல்

வேலைப்பளுவை உயர்த்தாமல், ஆட்குறைப்பு செய்யாமல் சம்பள உயர்வு தரமுடியாது என்று திட்டவட்டமாக மின்வாரியம் கூறி வருகிறது. "ஸ்டாப் பிக்ஸிங்" முறையை பரிட்சார்த்தமாக அமுல்படுத்துவதாகக் கூறி தனது தாக்குதலை துவக்கி விட்டது. பதவி உயர்வுகள் கிடையாது. காலியுள்ள இடங்கள் பூர்த்தி செய்வதில்லை. புதிதாக ஆட்கள் நியமனம் செய்வது கிடையாது. பலவித சட்டஉதவிகள் நிறுத்தம். ஸ்டேக்கரிங் அலவன்ஸ் முதலிய பல தாக்குதல்கள் தொடுக்கப்பட்டு விட்டன.

### 'கம்ப்யூட்டர்' அபாயம்

கிராம விஸ்தரிப்பு சம்பந்தமாக கம்ப்யூட்டர் புகுத்துவது பற்றி அமெரிக்கப் பொறியாளர் எழுதிய கட்டுரை ஒன்றை ஆராய்ந்து அமுல்படுத்திட மின் வாரியத் தலைவர் அக்கறை காட்டுவதாகத் தெரிகிறது.

### தொழிலாளர்கள் மீது தாக்குதல்

இவைகளை எதிர்த்து தொழிலாளர்கள் போராடுவார்கள் என்பதை உணரும் வாரியம், எதிர்ப்பவர்களையும் தொழிற்சங்க ஊழியர்களையும் பழிவாங்குவதற்குச்சாட்டையை கொடி காட்டியுள்ளது. திட்ட மேற்பார்வையாளர்கள் கூட்டத்தில் இதற்கு விரிவான திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளதாம். தொழில் தகராறுகளை தொழிலாளர் இலாகா பரிசீலனை செய்யக் கூடாதென்று ரகசிய உத்திரவுகள் பிறப்பிக்கப்பட்டுள்ளனவாம். ஆளுங்கட்சிக்கு ஆதரவுடைய சங்கங்களை ஊக்குவிக்க 'செக்ஆப்' முறையை அமுல்படுத்த திட்டமிட்டுள்ளது. போராடும் தொழிலாளர்களை ஒடுக்க போலீஸ் உதவி வேண்டும் என்று வாரியத் தலைவரே மாநில போலீஸ் (ஐஜி) அதிகாரிக்கு கடிதம் எழுதியுள்ளாராம்.

### அறைகூவல்

எனவே, அனைத்துச் சங்கங்களையும் சார்ந்த அனைத்துத் தொழிலாளர்களும் சங்க—கட்சி இணைப்பு வேறுபாடு இன்றி இத் தாக்குதல்களை எதிர்த்துப் போராட முன்வரும்படி மத்திய அமைப்பு அறைகூவல் விடுத்துள்ளது.

## இன்சூரன்ஸ் சங்கங்கள் இணைந்தன

மதுரை, டிச. 11—

பொது இன்சூரன்ஸ் ஊழியர்களுடைய சங்கமான அகில இந்திய இன்சூரன்ஸ் ஊழியர் சங்கத்துடன் மெட்ராஸ் மோட்டார் அண்டு ஜெனரல் இன்சூரன்ஸ் ஊழியர் சங்கமும் இணைந்தது.

இந்த இணைப்பை உறுதிப்படுத்தும் மாநாடு சென்னையில், 10, 11 தேதிகளில் நடைபெற்றது.

இந்த மாநாட்டில் அகில இந்திய இன்சூரன்ஸ் ஊழியர் சங்கத் தலைவர் சந்திரசேகர போஸ் கலந்து கொண்டு உரையாற்றினார்.

இந்த இணைப்பின் மூலம் தென்பிராந்தியத்தில், அகில இந்திய இன்சூரன்ஸ் ஊழியர் சங்கம் ஒன்றுதான் பெருவாரியான ஊழியர்களைக் கொண்ட சங்கமாக மாறியது.

இந்த இணைப்பை, பொது இன்சூரன்ஸ் ஊழியர் அனைவரும் மகிழ்ச்சியோடு வரவேற்றனர். மதுரையில் சிலர் தங்கள் மகிழ்ச்சியை பட்டாசு வேட்டுகளைப் போட்டு தெரிவித்தனர்.

## கேரள பந்த்

(1-ம் பக்க தொடர்ச்சி)

களை அனுப்பி பேருதவி புரிந்துள்ளனர்.

(தானும் ஒரு கம்யூனிஸ்ட் என சொல்லிக் கொண்டிருக்கும் தமிழ்நாட்டு கல்யாணசுந்தரம் வெங்கத்தை ஒதுக்கி வைத்துவிட்டு இது பற்றி யோசிப்பாரா? அல்லது அச்சுதமேனன் கேரள வலது கம்யூனிஸ்டு, தான் தமிழ்நாட்டு வலது கம்யூனிஸ்ட் என்று யோசிப்பதை ஒதுக்கி விடுவாரா?)

### போகப் போகத் தெரியும்

அடக்குமுறை வேலைகளில் அச்சுதமேனனுக்கு எடுபிடி வேலை மேற்கொண்ட கருணாநிதி கேரள மக்களின் பந்திற்கு முன்னதாகவே இரண்டு போலீஸ் படைப்பிரிவை அனுப்பி, அவைகள் எர்ணாகுளம், கோழிக்கோடு போன்ற பகுதிகளில் நிறுத்தப்பட்டன.

கேரளத்தின்பல்வேறு பகுதிகளில் இந்திரா காந்தியின் மத்திய ரிசர்வ் போலீஸ் படையும் முன்னக் கூடியே பல்வேறு இடங்களில் நிறுத்தப்பட்டன.

மக்களின் நேரடி பிரச்சனைகளை முன் வைத்து சுரண்டல் கூட்டங்களுக்கு சாவு மணி அடிக்க வழி காட்டும் இப்போராட்டங்கள் எங்கெங்கு உக்கிரமாக நடக்கிறதோ அங்கெல்லாம் இந்திரா காந்திகளும், கருணாநிதிகளும், அச்சுதமேனன்களும் கைகோர்த்துக்கொள்வார்கள் என்பதற்கு இது ஒரு சான்றாகும். இந்த எழுதப்படாத சொல்லப்படாத கூட்டில் இன்னும் யார் யார் சேருவார்கள் என்பது போகப் போகத் தெரியும்.

## மதுரை நெசவாளர் 525 பேர் கைது

மதுரை, நவ 11—

மதுரை நெசவாளர்கள் கடந்த 3 நாட்களாக மறியலில் ஈடுபட்டு வருகின்றனர். போராட்டக் குழு தலைவர் ஜெ எஸ் கிருஷ்ணமூர்த்தி, (சி ஐ டி யூ) ஜெ ஆர் ராமலிங்கம் [ஸ்தாபனகாங்] மற்றும் 45 பெண்கள் உட்பட இதுவரை 525 பேர் கைதாகி சிறையில் உள்ளனர்.

காலவரையற்ற உண்ணாவிரதம் தொடர்ந்து நீடிக்கிறது.

## ஐ டி ஐ மாணவர் உண்ணாவிரத கிளர்ச்சி

கடலூர், டிச. 9—

கடந்த 5-ந் தேதி முதல் இங்குள்ள தொழிற்பயிற்சி பள்ளி (ஐ டி ஐ) மாணவர்கள் தங்களது கோரிக்கை ஏற்கப்படாததால 9-ந் தேதி முதல் தொடர் உண்ணாவிரதம் தொடங்கியுள்ளனர். உண்ணாவிரதத்தை இந்திய மாணவர் சங்கத்தின் தென்னாற்காடு மாவட்டச் செயலாளர் துவக்கிவைத்துப் பேசினர்.

காரணமின்றி நீக்கப்பட்ட 6 ஐடிஐ மாணவர்களை மீண்டும் சேர்க்கக் கோரியும் அபராதமாக வாங்கப்பட்ட 5 ரூபாயை திரும்ப மாணவர்களிடம் அளிக்கக்கோரியும் வேலைக்கு உத்திரவாதம் கோரியும் போராடிவருகிறார்கள்.

## ஆசிரியருக்கு

### சைக்கிள்களில் கண்ணாடி உத்திரவை அரசு திரும்பப் பெறவேண்டும்

ஐயா,

கடந்த வாரம் அரசாங்கம் திடீரென ஒரு புது உத்தரவு போட்டுள்ளது. பின்னால் வரும் வாகனங்களைப் பார்ப்பதற்காக சைக்கிளில் ஒரு கண்ணாடி—ஒரு 'குவி ஆடி'யை பொருத்த வேண்டும் என்று உத்தரவு போட்டுள்ளது.

எப்பொழுதும் போல் 'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்' என்ற பழமொழியை உணர்ந்த பெரிய கடைக்காரர்கள், அதனுடைய விலையை ரூ 10 ரூ 13, ரூ 15, ரூ 18 என்று உயர்த்தியுள்ளனர்.

இந்த உத்தரவு அவசியமற்றது. சைக்கிள் ஏழைகளின் வாகனம். சைக்கிள் டியூப், 'பஞ்சர்' ஆனாலும்—'பர்ஸ்ட்' ஆனாலும் பழைய தாகி விட்டாலும் ரூ 4-50க்கு புதிய டியூப் வாங்க முடியாமல்—ஒட்டுக்கு மேல் ஒட்டு போட்டு அதனை உபயோகப்படுத்துகின்றனர். மேலும் இந்த குவி ஆடி பொருத்துவதால் நன்மையை விட தீமையே அதிகமாகும். சைக்கிள் கீழே விழும் வாகனம். எனவே அப்பொழுது கண்ணாடி உடைந்து விடும். மீண்டும் ரூ 10, ரூ 15 என்று போட்டு புதிது வாங்க முடியாது—இன்றுள்ள விலைவாசியில்—நெருக்கடியில்!

ஏற்கனவே 'டைனமோ'வும் 'பெல் கப்'பும் ஏன், சைக்கிளுமே திருடு போய்க் கொண்டிருக்கின்றன. இனியும் கண்ணாடியையும் களவு கொடுக்க வேண்டுமா, என்ன?

ஆகவே அரசாங்கம் இந்த உத்தரவை வாபஸ் பெற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு
மதுரை, மாநகரக் கல்லூரி மாணவர்கள்,
பி மாணிக்கியநாதன் (பி எஸ்ஸி)
பி நடராஜன் [பி ஓ]
ஆர் நடராசன் (பி ஏ)

## உணவு தான்ய மொத்த வணிகம்

### அரசு ஏற்க தி.மு.க. பொதுக்குழு கோரிக்கை

மதுரை. டிச. 9—

கடந்த 6, 7, 8 தேதிகளில் இங்குள்ள திருப்பரங்குன்றத்தில் நடந்த திமுக செயற்குழு பொதுக்குழு கூட்டங்களில் உணவு தானிய மொத்த வர்த்தகத்தில் வியாபாரிகள் ஈடுபடுவதை அறவே ஒழிக்கவேண்டும் என்று அரசை கேட்டுக்கொள்ளும் தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது.

தீர்மான விவரம் வருமாறு:—

உணவு தானியங்களின் விலையை கட்டுப்படுத்தி நியாயவிலையில் மக்களுக்கு கிடைக்கச் செய்யும் வகையில் உணவு விநியோக நிறுவனத்தின் மூலம் மேலும் கொள்முதலை தீவிரப்படுத்துவதற்கான முயற்சிகளை மேற்கொள்ளுவதோடு, உணவு நெருக்கடியைப் பயன்படுத்திக் கொண்டு உற்பத்தி முனையிலும் வாணிக முனையிலும் கொள்ளை இலாபம் அடிப்பதைத் தடுத்து நிறுத்த உணவு தானிய மொத்த வியாபாரத்தில் வணிகர்கள் ஈடுபடுவதை அறவே தடை செய்து, உணவு தானியங்களை விவசாயிக்குக் கட்டுப்படியாகும் நியாயமான விலையில்வாங்குவதற்கு கூட்டுறவு நிறுவனங்களைப் பயன்படுத்தும் பணியை மேற்கொள்ள வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறது.

### வறட்சி நிவாரணத்துக்கு 5 கோடி ரூபாய்

வறட்சி நிவாரணப் பணிகளுக்காக ரூபாய் 5 கோடி ஒதுக்கப்படவேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளப்பட்டது.

### மத்திய அரசுக்கு கோரிக்கை

தமிழ்நாட்டில் 40 நாடாளுமன்றத் தொகுதிகள் அமைய வேண்டுமென்றும், ஒவ்வொன்றிலும் 7 சட்டப் பேரவைத் தொகுதிகள் இருக்கும் வகையில் அமைக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டது.

தீர்க்கப்படாமலிருக்கும் நதிநீர்ப்பிரச்னைகளை உகந்த முறையில் வேகமாகத் தீர்த்து வைக்க வேண்டும் என்றும் மத்திய அரசை கேட்டுக் கொண்டு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### அமெரிக்கா, பிரிட்டனுக்கு கண்டனம்

இந்துமாக்கடலில் டிகோகார்சியா போன்ற பகுதிகளில் அமெரிக்க, பிரிட்டிஷ் இராணுவ தளங்கள் ஏற்படுத்துவதற்கு கண்டனம் தெரிவித்தும், இத்தகைய இராணுவத் திட்டங்களை நிறுத்துவதற்கு ஐ நா சபையில் தக்க முயற்சிகளை எடுக்கும்படி இந்திய அரசை வற்புறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### ஊர்வலம்

செயற்குழு, பொதுக்குழுக் கூட்டங்கள் நடந்ததையொட்டி, ஞாயிறன்று பெரும் ஊர்வலம் நடந்தது.

கீழவாசலிலிருந்து புறப்பட்ட இந்த ஊர்வலத்தில் மதுரை, நெல்லை, முகவை' மாவட்டங்களிலிருந்து சுமார் 80 பஸ், லாரிகளில் ஆயிரக்கணக்கானோர் கலந்து கொண்டனர். ஊர்வலத்தில் அமைச்சர்களும் தலைவர்களும் பவனி வந்தனர்.

தமுக்கம் மைதானத்தில் ..திருமதி .. தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் திமுகழகத் தலைவர் கருணாநிதி, பொதுச் செயலாளர் நெடுஞ்செழியன், பொருளாளர் அன்பழகன், மற்றும் அமைச்சர்கள் மாதவன், அன்பில் தர்மலிங்கம், என் வி நடராசன், மன்னை நாராயணசாமி, சாதிக் பாட்சா, உ சண்முகம், மாநிலங்களவை உறுப்பினர் என் எஸ் ராஜேந்திரன், மாவட்ட செயலாளர் பொன் முத்துராமலிங்கம் மற்றும் பல தலைவர்கள் பேசினர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 ..... ரோடு மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுவர் ஆசிரியர் கே முத்தையா.

# சேலம்-தர்மபுரி மாவட்டத்தில் வறட்சி

சேலம், டிச. 10—

புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை ஆகிய மாதங்களில் சேலம் தர்மபுரிமாவட்டத்தில் நல்ல மழை பெய்து, மேட்டூர் அணை நிரம்பி சேலம், தர்மபுரி மாவட்டத்தில் உள்ள ஏரி, குளங்களும் நிரம்பி நெல், கரும்பு, மரச்சீனிக்கிழங்கு, ராகி போன்ற பயிர்களின்விளைச்சல் தரும் தருணம் மானாவாரி பயிர்களாகிய கம்பு சோளம் வேர்கடலை போன்ற பயிர்கள் வைகாசியில்மழை பெய்தால் வைகாசி கடைசியில் விதைத்தல் தொடங்கி ஆனி மாதம் முதல் வாரத்திற்குள் முடிவடையும். புரட்டாசி மாதம் அறுவடை நடைபெறும். இதனால் கூலி விவசாய தொழிலாளர்களும் சிறுநில விவசாயிகளும் வாரகுத்தகைக்காரர்களும் இதனால் பலன் அடைந்து 6 மாதத்திற்கு கடைகளில் உணவு வாங்காமல் தன் உழைப்பினால் வந்த வருவாயை வைத்து சாப்பிடுவார்கள். மேலும் இடையில் சில கூலிவேலை செய்து வரும் வருமானத்தைக் கொண்டு துணி, நல்லது கெட்டது போன்ற காரியங்களுக்கு பயன்படுத்துவார்கள்.

### பயிர்கள் நாசம்

ஆனால் இந்த ஆண்டோ பருவமழை பெய்யவில்லை. எனவே மேட்டு நிலத்தில் போடப்பட்ட மானாவாரிப்பயிர்களாகிய சாமை, கம்பு போன்றவைகள் முளையிலேயே கருகிவிட்டன. ஆவணி மாதம் பெய்தமழையில் சோளம், ராகி போன்றவைகளை பயிர் செய்து மழையில்லாமல் அதுவும் சாய்ந்துவிட்டது. கடலைப் பயிர்களை கம்பளி புழுக்கள் தின்று பெரும் நஷ்டத்தை ஏற்படுத்தியுள்ளது.

### சோகத்தில் கிராம மக்கள்

மேட்டூர் அணையில் தண்ணீர் நிரம்பி இருந்தால் காவேரி கிழக்கு வாய்க்கால் மூலம் வரும் தண்ணீரை வைத்து ஒரு சாகுபடியும் கிணற்று நீரை வைத்து ஒரு சாகுபடியும் செய்வார்கள். பூலாம்பட்டி, குமாரபாளையம், பள்ளிபாளையம், ஆகியவை தஞ்சை போன்ற கறவாளி ஏரியாவாக இருக்கும் காவேரியில் தண்ணீர் குறைந்தவுடன் தண்ணீர் இல்லாமல் அதுவும் வறட்சியாக உள்ளது. சேலம் மாவட்டத்திலேயே ஆத்தூர் தாலுகா செழிப்பான பகுதியாக விளங்கி வந்தது. கடந்த மூன்று ஆண்டுகளாக மழை சரியாக இல்லாமையால் இந்த பகுதியும் வறட்சியால் பாதிக்கப்பட்டுள்ளது. ராசிபுரம், நாமக்கல் ஒரு பகுதி, திருச்செங்கோடு ஒரு பகுதி, சங்ககிரி தாலுகா ஓமலூர், தர்மபுரி, அரூர் ஆகிய தாலுகாக்களில் கிணற்றில் தண்ணீர் இல்லாமையினால் பயிர்கள் கருகிவிவசாயிகளையும்கிராம மக்களையும் பெரும்வேதனைக்குள்ளாக்கிவிட்டது.

### வறட்சி நிவாரணம் தொடங்குக

அரிசி விலை ரூ 6—50 முதல் 8—50 வரை விற்கப்படுகிறது. மற்ற சோளம், கம்பு, ராகி போன்ற சிறு தானியங்கள் கிலோ ரூ 1-80 முதல் ரூ2—10 வரை விற்கிறது. ஜனங்களுக்கு வேலை இல்லாமல் பணம் இல்லாததினால் இதை வாங்குவதற்கு மிகவும் கஷ்டப்படுகிறார்கள். மரவள்ளிககிழங்கு 40 பைசா முதல் 50 பைசா வரைக்கும் விற்கப்படுகிறது. இதுதான் சேலம் மாவட்டத்தின் பெரும்பான்மையோரின் உணவு.

தமிழக அரசு குறுவை அறுவடையில் கொள்முதல்செய்து உணவு பற்றாக்குறை மாவட்டங்களுக்கு விநியோகம் செய்வதாக கூறி இருந்தார்கள் கிராமம் பகுதியில் வறட்சி ஏற்பட்டும்கூட கிராமப்பகுதி மக்களுக்கு உணவு தானியம் கொடுக்கப்படவில்லை.

இந்த நிலையை போக்கிட உடனடி வறட்சி நிவாரணப் பணிகளைத் தொடங்கிட வேண்டும் என்று சேலம்—தர்மபுரி மாவட்ட விவசாயிகள் சங்கமும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் திமுக அரசை வற்புறுத்தியுள்ளன.

## விருத்தாசலத்தில் உமாநாத்துக்கு அனைத்துச் சங்க வரவேற்பு

விருத்தாசலம், டிச. 7—

அண்மையில் இங்கு வருகை தந்த தமிழக சிஐடியூ பொதுச் செயலாளர் தோழர் ஆர். உமாநாத்துக்கு இரயில்வே தொழிலாளர் போராட்டக் குழு, சிஐடியூ, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, விவசாயிகள் சங்கம் ஆகியவற்றின் சார்பில் மகத்தான வரவேற்பு இரயில்வே நிலையத்தில் அளிக்கப்பட்டது. இந்த வரவேற்பில் மஸ்தூர் யூனியன், தொமுச, அதிமுக சங்கங்களைச் சார்ந்த தலைவர்களும் தொழிலாளர்களும் கலந்து கொண்டனர்.

மஸ்தூர் யூனியன் அலுவலகத்தில் கன்வீனர் கோடாச்சாமி (தொமுச) தலைமையில் நடந்த எஸ்சிசி ஆர்எஸ் பேரவைக் கூட்டத்தில் கலந்துகொண்டு பேசினார்.

மாலையில் கே. துரைசாமி தலைமையில் நடந்த சிஐடியூ பொதுக்கூட்டத்திலும் தோழர் உமாநாத் கலந்து கொண்டு உரையாற்றினார். இரயில்வே போராட்ட வழக்கு நிதிக்காக கன்வீனர் கோடாச்சாமியிடம் சிஐடியூ சார்பில் ரூ. 300ஐ தோழர் உமாநாத் வழங்கினர்.

மற்றும் கேசவன் குட்டி' கண்ணன் குட்டி (விழுப்புரம்) கோடாச்சாமி, என். எம். விஸ்வநாதன், என். பார்த்தசாரதி (சென்னை) என். ஆர். ராமசாமி [விவசாயிகள் சங்கம்) ஆகியோர் பேசினர்.

## பெர்னாண்டசுக்கு ரயில்வே அமைச்சகத்தின் மிரட்டல் கடிதம்

புதுடெல்லி டிச 10—

தொழிற்சங்கங்களை அரசியலாக்கும் முயற்சியில் ரயில்வே தொழிலாளர்களை பீகார் இயக்கத்தில் ஈடுபட செய்வதால் அகில இந்திய ரெயில்வே தொழிலாளர் சம்மேளனத்திற்கு அளிக்கப்பட்டுள்ள அங்கீகாரத்தை ரத்து செய்ய நேரிடும் என அச்சம்மேளனத்தின் தலைவர் பெர்னாண்டசுக்கு ரயில்வே அமைச்சகம் மிரட்டல் கடிதம் எழுதியுள்ளது.

## முதலமைச்சருக்கு மாணவர்சங்கம் தந்தி

பரமக்குடி, டிச. 10—

எமனேஸ்வரத்தில், கடந்த 7-ந் தேதி முதல் மூடப்பட்டிருக்கும் ஈஸ்வர விலாஸ் தனியார் பள்ளியை ஆசிரியர்கள் மற்றும் மாணவர்களின் நலன் கருதி உடனே திறக்க நடவடிக்கை எடுக்கும்படி வற்புறுத்தி மாநில முதலமைச்சருக்கும் ஏனைய அதிகாரிகளுக்கும் இந்திய மாணவர் சங்கக்கிளை சார்பில் தந்திகள் அனுப்பப்பட்டுள்ளன.

அப்பள்ளி ஆசிரியர்கள் மீது நிர்வாகி தொடர்ந்த அவதூறு வழக்கு இராமநாதபுரம் சப்-டிவிஷனல் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் தள்ளுபடி செய்யப்பட்டது. இதனால் ஆத்திரமுற்ற நிர்வாகி பள்ளியை திடீரென்று மூடிவிட்டார்.